Licensed to Post Without Pre-Payment Licence No 6T N MS CPP 55 Progressive Tamil Daily to the People

# விடுதலைபுலிகள்மீண்டும்போர்

Regd No. TN MS [C] 244 Phone 420212 4 பக்கம் விலை 70 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 12 சென்னை வெள்ளி 20-11-87 வெளியூர் சனி 21-11-87 இதழ் 34

# ஈழத்தமிழர்கட்கு உணவு விநியோகித்த இந்திய வீரர்கள் நால்வர் பலி

## அகதிகள் முகாமில் எந்திர துப்பாக்கி வைத்து புலிகள் தாக்குதல்

### ஒருபக்கம்சமாதானம்-மறுபக்கம் குண்டுவீச்சு

**கொழும்பு, நவ. 20- இந்திய வீரர்களை விடுதலை செய்தி அதே நேரத்தில் விடுதலைப்புலிகள் பல்வேறு இடங்களில் திடீர் தாக்குதல் நடத்தினர்.**

இந்திய வீரர்களை விடுதலை செய்வதாக இநதிய ராணுவத்தின் கவனத்தை திசைதிருப்பி விட்டு அகதிகள் முகாம் சிங்களக்குடியிருப்பு காவல் நிலையங்கள் மீது விடுதலைப் புலிகள் திடீர் தாக்குதல் நடத்தினர்.

அப்பாவிகளாக தஞ்சம் புகுந்த அகதிகள் மீது இயந்திரத் துப்பாக்கிப் பிரயோகமும் பீரங்கி தாக்குதலும் நடத்தினர்.

ஈழத் தமிழர்களுக்கு உணவும். மருந்தும் கொண்டு சென்ற வாகனங்கள் மீதும்தாக்குதல் தொடுத்தனர்.

ஒருபக்கம் இந்திய வீரர்களை ஒப்படைக்கும் நிகழ்ச்சி நடந்து கொண்டு இருக்கும் போதே இன்னொரு பக்கம் இத்தகைய தாக்குதல்களைத் தொடங்கினர்.

இந்திய வீரர்கள் 18பேரை விடுதலை செய்கிறோம்என்று அறிவித்து ஒப்படைத்த விடுதலைப்புலிகள் மீண்டும் யுத்தத்தை தொடங்கிவிட்டதாக லண்டன்செய்திநிறுவனமான 'ராய்டர்' செய்தி நிறுவனம் அறிவித்துள்ளது.

யாழ்ப்பாணத்திலிருந்து 100 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள முல்லியாவாலை என்ற இடத்தில் ஈழத்தமிழர்களுக்கு இந்திய வீரர்கள் உணவுசப்ளை செய்துகொண்டிருந்தனர். அங்கு இந்திய ராணுவ லாரிகளில் உணவுப் பொருட்கள் கொண்டு போகப்பட்டிருந்தன.

புலிகள் பிடித்து வைத்திருந்த 18 இந்தியவீரர்களை இந்திய அமைதிப் படையிடம் ஒப்படைத்த அதே நேரத்தில் உணவு சப்ளை செய்து கொண்டிருந்த இந்திய வீரர்கள் மீது விடுதலைப்புலிகள் திடீர் தாக்குதல் நடத்தினர் இதனால் இந்திய வீரர்கள் 4 பேர் கொல்லப்பட்டனர் 11 பேர் படுகாயம் அடைந்தனர்.

### மட்டக்களப்பு பகுதியில்...

மட்டக்களப்பு அம்பாரை திரிகோணமலை பகுதிகளிலும்விடுதலைப்புலிகள் தாக்குதல் நடத்தி யிருப்பதாக ''ராய்ட்டர்'' செய்தி கூறுகிறது. ஈழத்தமிழர்கள் அடைக்கலம் புகுந்திருந்த அகதிகள் முகாமில் புலிகள் துப்பாக்கியாலும் இயந்திரத் துப்பாக்கியாலும், பீரங்கிகளாலும் தாக்குதல் நடத்தினர் சிங்களவர் குடியிருப்பு போலீஸ் நிலையம் மீதும் சரமாரி குண்டுவீச்சு நடத்தப்பட்டதாகவும் சேதம் பற்றிய விவரங்கள் உடனடியாக கிடைக்க வில்லை யென்றும் ராய்ட்டர் செய்தி கூறுகிறது.

அம்பாரையில் சிங்களர் பகுதியில் விடுதலைப்புலிகள் நடத்திய தாக்குதலில் 4பேர் கொல்லப்பட்டார்கள்.

மட்டக்களப்பு பகுதியில் அகதிகள்முகாமிலும்போலீஸ் நிலையத்திலும் விடுதலைப் புலிகள் நேற்று நள்ளிரவு இயந்திரத் துப்பாக்கிகளாலும் பீரங்கிகளாலும் தாக்குதல் நடத்தியதாகவும் அப்போது கடும் மழை பெய்து கொண்டிருந்ததாகவும் ராய்ட்டர் கூறுகிறது.

போர் நிறுத்தத்திற்கு தயாராக இருப்பதாகவிடுதலைப் புலிகள் தளபதி மாத்தையா நேற்று மாலை கூட நிருபர்களிடம் கூறியிருந்தார். இப்படிப்பட்ட நிலையில் விடுதலைப் புலிகள் ''திடீர்'' தாக்குதல் நடத்தியிருப்பது பெரும் நம்பிக்கை துரோகமாக அமைதிப்படை அதிகாரிகள் வட்டாரத்தில் கருதப்படுகிறது.




# விடுதலைப்புலிகள் கோரிக்கை; ஐ. நா. சபைபுறக்கணிப்பு

நியூயார்க், நவ, 20- ஈழத்தமிழர் பிரச்சினை குறித்து உலக நாடுகள் சபை தலையிட வேண்டும் என விடுதலைப்புலிகள் அனுப்பியுள்ள கடிதத்தை தற்போது ஐ.நா சபை கவனிக்காது என தெரிகிறது.

உலக நாடுகள் சபையில் உள்ள இந்திய பிரதிநிதி சின்மாய்கரேகான் செயலாளர் நியூலரைச் சந்தித்துப் பேசினார்.

பல்வேறு விஷயங்கள் குறித்து இவர்கள்பேசியதாக தெரிகிறதுதென்கிழக்குஆசிய நிலவரம்ஈரான்-ஈராக்யுத்தம் இந்திய-இலங்கை ஒப்பந்தம் ஆகியவை குறித்து இருவரும் பேசினார்கள்.

விடுதலைப்புலிகள் யாழ்பாணம் நிலவரம் குறித்து எழுதியுள்ள கடிதம் பற்றி தற்போது உலகநாடுகள் சபை ஏதும் செய்யாது என்றும் அக்கடிதம் கவனத்தில் எடுத்துக் கொள்ளப்படமாட்டாது எனவும் தெரிகிறது.

விடுதலைப்புலிகள் தலைவர் பிரபாகரன் உலக நாடுகள் சபைக்கு எழுதியுள்ள கடிதத்தில் இந்திய அமைதிப் படையினர் மீது தெரிவித்துள்ள புகார்கள் ஆதாரமற்றது என இந்திய பிரதிநிதி, உலகநாடுகள் சபை செயலாளர் கியூலரிடம் தெரிவித்துள்ளார்.

இந்தியஇலங்கை ஒப்பந்தத்தின்படியும் இலங்கை அரசு கேட்டுக் கொண்டதற்கு இணங்கவேஇந்திய அமைதிப் படையினர் யாழ்ப்பாணத்தில் உள்ளதாகவும் இந்திய பிரதிநிதி கியூலரிடம் தெரிவித்துள்ளார்.

### இந்தியா கேட் அருகில் காந்தி சிலை வைக்க முடிவு

புதுடெல்லி நவ, 20- டெல்லியில் இந்தியா கேட் அருகில் மகாத்மா காந்தி சிலைவைக்க மத்திய அரசு முடிவு செய்துள்ளது 1989 ஜனவரி மாதவாக்கில் அது நிறுவப்படும் என்று மாநிலங்களவையில் நகர்ப்புற வளர்ச்சித் துறை ராஜாங்க அமைச்சர் தல்பீர்சிங் கூறினார்.

### காதல் தோல்வி: வாலிபர் தற்கொலை

சென்னை, நவ, 20- காதல்தோல்வியால் வாலிபர் ஒருவர் தற்கொலை செய்து கொண்டுள்ளார்.

இதுபற்றிய விபரமாவது:

அம்பத்தூரை சேர்ந்த அண்ணாமலையின் புதல்வா புகழேந்தி (வயது 25) இவர் ஒரு பி.எஸ்.சி. பட்டதாரி. இவர் அண்ணாநகர் டவரிலிருந்து குதித்து தற்கொலை செய்து கொண்டார் இவரது உடலருகே ஒரு கடிதம் கிடந்தது. அந்தக்கடிதத்தில் தனது முடிவுக்கு யாரும் காரணம் இல்லையென்றும் காதலில் ஏற்பட்ட தோல்வியால்தான் இந்த முடிவை மேற்கொண்டதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

இதுபற்றி அண்ணாநகர் போலீசார் விசாரித்து வருகின்றனர்.

### கண்டக்டர்-மாணவர்கள் தகராறு: 3பஸ்கள்சேதம்

சென்னை, நவ. 20- சென்னை அயன்புரத்திலிருந்து அண்ணா சதுக்கம் சென்ற பஸ்சில் கல்லூரி மாணவர்கள் சிலர் பயணம் செய்தனர் அந்த பஸ் கண்டக்டருக்கும் மாணவர்களுக்கும் இடையில் தகராறு ஏற்பட்டது அதையொட்டி டி 1 காவல் நிலையத்தில் கண்டக்டர் புகார் கொடுத்தார்.

பஸ்சில் வந்த மாணவர்களில் சிலர் கல்லூரிக்கு சென்று மாணவர்களை போலீஸ் நிலையத்தில் காவலில் வைத்ததாக வதந்தி கிளப்பினர்.

ஆவேசம் கொண்ட மாணவர்கள் கல்லூரியை விட்டு வெளியே வந்து அங்கு நின்றிருந்த 6வி, 2வி, 22 ஆகிய எண் பஸ்களை அடித்து கண்ணாடிகளை உடைத்தனர்,

இது குறித்து ஜாம்பஜார் போலீஸ் இன்ஸ்பெக்டர் வேணுகோபால் விசாரித்து வருகிறார்.

# தி.மு.க. இயற்றிய சட்டத்தால் பதவிஇழந்ததிமுக.உறுப்பினர்கள்

வேலூர், நவ. 20- திமுக ஆட்சியில் இயற்றப்பட்ட சட்டம்முதன் முதலாக அமல் படுத்தப்பட்டுள்ளது அந்த பேரூராட்சியில்திமுக உறுப்பினர்கள் சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளனர்.

வடாற்காடு மாவட்டம் கழிஞ்சூர் பேரூராட்சி நிர்வாகத்தில் தலைவருடன் ஒத்துழைக்காத காரணத்திற்காக திமுக உறுப்பினர்கள் அனைவரையும் ஆறுமாதகாலத்துக்குசஸ்பெண்ட் செய்து பேரூராட்சிகள் இயக்குநர் உத்தரவுபிறப்பித்துள்ளார்.

கழிஞ்சூர் பேரூராட்சியின் தலைவராக கழகத்தைச் சேர்ந்த மு. குப்பன் இருக்கிறார். துணைத் தலைவர் எம் முனுசாமியும் மற்ற உறுப்பினர்களும் திமுகவையும் அதன் ஆதரவுகட்சிகளையும்சேர்ந்தவர்கள். இவர்கள் பேரூராட்சி நிர்வாகத்தில் தலைவருக்கு பல தொல்லைகள் கொடுத்து மன்றக் கூட்டமே நடத்த விடாமல் செய்து வந்தனர். எனவே பேரூராட்சி நிர்வாகம் செயலிழக்கும் நிலை ஏற்பட்டது

இதை விளக்கி ஊராட்சிகள் சட்டம் 149 (3) பிரிவின் படிபேரூராட்சி நிர்வாகத்தை நடத்தும் பொறுப்பை தலைவருக்கு அளிக்கவேண்டுமென்றுசென்னைபேரூராட்சிகள் இயக்குநரை தலைவர் மு,குப்பன் கேட்டுக் கொண்டார்.

### பேரூராட்சி நிர்வாகம்

இந்த வேண்டுகோளை எற்று நிர்வாகத்தைநடத்தும் பொறுப்பையும் கடமையையும் தலைவருக்கே அளிக்க பேரூராட்சிகள் இயக்குநர் அறிவிப்புவெளியிட்டுள்ளார்.

இதன்படி பேரூராட்சி நிர்வாகத்துக்கு தொல்லை கொடுத்து வந்த திமுக உறுப்பினர்கள் அனைவரும் சஸ்பெண்ட் செய்யப்படுகிறார்கள். ஆறு மாத காலத்துக்கு உறுப்பினர்களைக் கொண்டபேரூராட்சி கூட்டம் நடக்காது. நிர்வாகத்தை தலைவரே கவனித்து வருவார்.

1958ம் ஆண்டு ஊராட்சிகள் சட்டம் அமலுக்கு வந்தது. ஆனால் தலைவருக்கே அதிகாரம் அளிக்கும் 149 (3) சட்டப்பிரிவு 1970ம் ஆண்டு தான் இயற்றப்பட்டது கடந்த 17 ஆண்டுகளில் இந்தசட்டப்பிரிவின் கீழ் நடவடிக்கை எடுத்திருப்பது தமிழக வரலாற்றில் இதுவே முதல் முறையாகும்.

### டெல்லியில் சோவியத் பிரதமர்

புதுடெல்லி, நவ. 10 சோவியத்பிரதமர் நிகோலாயரிச்கோவ் இன்று காலை புதுடெல்லி வந்தடைந்தார்

இந்தியாவில் நடைபெற இருக்கும் சோவியத் கலை விழாவை துவக்கி வைக்க இந்தியா வந்துள்ள ரிச்கோவுக்கும் அவரது துணைவியாருக்கும் விமான நிலையத்தில் உற்சாக வரவேற்பு அளிக்கப்பட்டது.

### ரூ. 6லட்சம் மதிப்புள்ள சாராயம் பிடிபட்டது

சென்னை, நவ. 20- திருவண்ணாமலைக்கு லாரிமூலம் சாராயம்கடத்திய இருவரை போலீசார் கைது செய்தனர்.

திருவண்ணாமலைக்குடி.டி ஜே. 6868 என்ற எண்ணுள்ள லாரியில் சாராயம் கடத்தி வந்த குமரேசன், மோகன் ஆகியோர் கைது செய்யப்பட்டனர்,

அவர்கள்கொடுத்த தகவலின் பேரில் 1600 லிட்டர் சாராயம் ஒரு வீட்டில் கைப்பற்றப்பட்டது,

மதுவிலக்கு டி ஐ ஜி அலெக்சாண்டர் உத்தரவின்பேரில் டி எஸ் பி காதர் உசேன் இன்ஸ்பெக்டர் வெள்ளையன் ஆகியோர் இந்தநடவடிக்கைகளை மேற்கொண்டனர்.

# 'எயிட்ஸ்' நோயை 6 வாரத்தில் குணப்படுத்தும் அதிசய மருந்து

புதுடெல்லி, நவ. 20- ஆட்கொல்லி நோயான 'எயிட்ஸ்' நோயை 6 வாரத்திலேயே குணப்படுத்தும் புதிய மருந்தொன்றை ஜெர்மனியில் உள்ள மருத்துவஆராய்ச்சி மற்றும் மருந்து வளர்ச்சி கல்லூரி கண்டுபிடித்துள்ளது.

''எயிட்ஸ்'' என்றழைக்கப்படும். பயங்கர நோய் இன்று உலக மக்களை அச்சுறுத்தி வருகிறது, ஓரின சேர்க்கை மற்றும் இயற்கை வழிகளுக்கு அப்பாற்பட்டு உடல் உறவு கொள்ளுதல் ஆண் பெண் உடலுறவால்ஏற்படும்வியாதிகள்சம்பந்தப்பட்டவர்களால் ஏற்படும் புதிய பதிய நோய்கள் இப்படிப்பட்டவகைகளில் எயிட்ஸ் நோய்ஏற்படுகிறது.

இந்தக் கொடிய நோயால் பாதிக்கப்பட்டவர்களுக்கு முறையான மருத்துவம் அளிக்கவும் சாத்யப்படுவதில்லை இது வரை அதற்கு மருந்து எதுவும் கண்டு பிடிக்காத நிலை தான் இருந்து வருகிறது இந்த நோய்க்கு சித்த மருத்துவத் துறையில் மூலிகை மருந்து ஏற்கனவே இருந்துவருவதாக சித்த மருத்துவர்கள் தெரிவித்துள்ளனர்.

ஜெர்மன் நாட்டில் உள்ள மருந்து ஆராய்ச்சித் துறையினர் எய்ட்ஸ் நோய்க்கு உடனடி நிவாரணம் அளிக்கும் புதிய மருந்துகளை கண்டு பிடித்துள்ளனர் பிராங்பர்ட்டில் உள்ள மருத்துவக்கல்லூரி கண்டுபிடித்துள்ள இந்தப் புதிய மருந்து 'எயிட்ஸ்' நோய்கிருமிகளை ஒரேயடியாக அழித்துவிடுகிறதுஎன்று இந்த கல்லூரியைச் சேர்ந்த டாக்டர் பிரகாஷ் சந்திரா புதுடெல்லியில் தெரிவித்தார்

ஜெர்மனியில் இருந்து புதுடெல்லி வந்திருக்கும் டாக்டர் பிரகாஷ்சந்திரா மேலும் கூறியதாவது:-

நோயாளிகளுக்கு இந்த மருந்தை கொடுத்தவுடனே முதலில் அழிக்கப்படுவது எயிட்ஸ்நோய் கிருமிகள்தான் மீண்டும் அந்தக் கிருமிகள் பரவா வண்ணம் தடுக்கப்படுகிறது.

மருந்து கொடுக்கப் பட்ட ஆறு வாரங்களில் (சுமார் 40 அல்லது 41,42) நாட்களிலேயே எயிட்ஸ் நோய் பட்டவர்த்தனமாக நீங்கி வருகிறது.

எயிட்ஸ் நோயாளிகள் 2 பேருக்கு இந்த மருந்து கொடுக்கப்பட்டது அவர்கள் பூரணகுணமடைந்து விட்டனர் மருந்துகொடுக்கப்பட்ட நோயாளிகளுக்கு மீண்டும் ஓராண்டுவரை இந்தநோய் அணுகுவதில்லை.

அத்தகைய நோய் எதிர்ப்பு சக்தியையும் இந்த மருந்து ஏற்படுத்தி விடுகிறது.

இவ்வாறு டாக்டர் பிரகாஷ்சந்திரா கூறினார்.

டாக்டர் பிரகாஷ்சந்திரா இந்தியாவைச் சேர்ந்தவர். டாக்டர் சந்திரா உள்ளிட்ட மருத்துவக்குழுவினர் பிராங்பர்டில் எய்ட்ஸ் நோய் பற்றியும்அதற்கான மருந்துகள் கண்டுபிடிப்பது பற்றியும் ஆராய்ச்சி நடத்திவருகிறார்கள் அவர்களின்கண்டுபிடிப்புகள் பற்றிய விவரங்கள் மருந்துகள் பற்றிய விவரங்களும் அமெரிக்கப் பத்திரிகையில் வெளியிடப்பட்டுள்ளன

ஜெர்மனியில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளமருந்து'டி.பி.ஏ' என்று சுருக்கமாக அழைக்கப்படுகிறது. 50 எயிட்ஸ் நோயாளிகள் தற்போது சிகிச்சை பெற்று வருகிறார்கள். அவர்களுக்கு இந்தப் புதியமருந்துகொடுக்கப்பட்டு வருகிறது. அமெரிக்காவில் உள்ள டிரினிடாட் மற்றும் அவாய் ஆகியஇடங்களுக்கும் இது அனுப்பப்படவிருக்கிறது.

### நாகாலந்து சட்டமன்றத் தேர்தல்

| | | |
|---|---|---|
| மொத்த இடங்கள் | : | 60 |
| அறிவிக்கப்பட்டவை | : | 32 |
| காங்கிரஸ் (இ) | : | 20 |
| நாகா தேசிய கட்சி | : | 6 |
| தேசிய மக்கள்கட்சி | : | 1 |
| சுயேச்சைகள் | : | 5 |

# சென்னை துரித ரயில்: அதிகநிதிஒதுக்காததேன்? வின்செண்ட் கண்டனம்

புதுடெல்லி, நவ. 20-

சென்னை பறக்கும் ரயில் திட்டத்தை துரிதமாகச் செயல்படுத்த மத்திய அரசு அதிக நிதி ஒதுக்காதது ஏன் என்று மாநிலங்களவையில் கழக உறுப்பினர் நாஞ்சில் வின்செண்ட் கேட்டார்.

மாநிலங்களவையில் கழக உறுப்பினர் நாஞ்சில் வின்செண்ட் பேசுகையில் கூறியதாவது:

நகர்ப்புற அதிவேக ரயில் போக்குவரத்துத்திட்ட கட்டுமானப் பணிக்கான 1978ம் ஆண்டுசட்ட திருத்தத்தை அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக்கழகத்தின் சார்பாகநான் வரவேற்கிறேன் இந்தத் திட்டம் வளர்ந்து வரும் மக்கள் தொகையால் சாலை போக்குவரத்தில் ஏற்படும் நெரிசலைப்போக்கு வதற்காக போக்குவரத்து வசதியை அடிப்படையாக வைத்து நகர்ப்புறத்தில் கொண்டு வரும் ஒரு முக்கிய மான திட்டமாகும் இந்த சட்டதிருத்தம் கல்கத்தா சுரங்க ரயில் திட்டத்தில் நில ஆக்கிரமிப்பால் ஏற்பட்டுள்ள தங்கலால் பாதிக்கப்பட்டுள்ள ரயில்வே முன்னேற்ற திட்டத்தை தவிர்ப்பதற்காக கொண்டுவரப்பட்டதாகும்.

இந்த நேரத்தில் நான் குறிப்பிட விரும்புவது சென்னை நகர துரிதரயில் போக்குவரத்து திட்டத்தை செயல்படுத்த எங்கள் புரட்சித் தலைவரின் அரசு நில ஆர்ஜிதத்தைப் பொறுத்தமட்டில் உள்ள அனைத்து பணிகளையும் செய்து முடித்துவிட்டது தாமதத்திற்கான காரணம் மத்திய அரசின் செயல் முறையே ஆகும்.

தமிழ்நாடு நிலத்தை ஆர்ஜிதம் செய்து அனைவருக்கும் கொடுத்து தனது பணியை முடித்துக் கொண்டது. இன்றைய விலை நிலவரப்படி இது சுமார் 50கோடியாகும் மத்திய அரசு ஏழாவது ஐந்தாண்டு திட்டத்தில் தனி முக்கியத்துவம் கொடுத்து இந்த திட்டத்தை 1990 ம் ஆண்டுக்குள்முடித்து விடுவதான வாக்குறுதியைத் தந்தது ஆனால் இன்றைக்கு முற்றிலும் மாறாக நடக்கின்றது இந்தத் திட்டத்தை 1983 84 ம் ஆண்டு 54கோடி ரூபாயில் திட்டம் தீட்டி அனுமதி அளித்தது.

1986-ம் ஆண்டு இந்த திட்டம் 107 கோடி ரூபாயாகத்திருத்தி அமைக்கப் பட்டது. ஆண்டுக்கு 20 கோடியில் இருந்து 25 கோடி ரூபாய் வரை தேவையான ஒரு திட்டத்திற்கு 1984-ம் ஆண்டில் இருந்து ஆண்டுக்கு மூன்று கோடிரூபாய் நான்கு கோடி ரூபாய் என்று வருடம் தோறும் அனுமதி அளிப்பதால் தான் இன்று 107கோடியாக மாற்றியமைக்க வேண்டியது ஆயிற்று நான்காண்டுகளாக இந்தத் திட்டத்திற்கு செலவுசெய்யப்பட்ட ரூபாய் 17கோடியாகும் 107 கோடி ரூபாய் திட்டத்திற்கு ஆண்டுக்கு மூன்று கோடி ரூபாய் ஒதுக்குவது வட்டி கட்டுவதற்காகவா? அல்லது விலையேற்றத்தை சரி கட்டுவதற்காகவா? என்று புரியவில்லை.

இந்தத் திட்டம் 1990-ம் ஆண்டில் முடியவேண்டு மென்பதற்காக பலமுறை மத்திய அரசை எங்கள் புரட்சித்தலைவா அணுகியுள்ளார். அமைச்சரிடம் நேரடியாக விவாதித்துள்ளார். பலமுறை கடிதங்கள் எழுதியுள்ளார். ஆனால் மத்திய அரசினுடைய நடைமுறை இந்ததிட்டத்தை ஊக்கப்படுத்துவதாகஅமையவில்லை.

இருந்தாலும் நிதி ஒதுக்கீட்டில் 4 கோடி ரூபாய் இந்த ஆண்டு ஒதுக்கிவிட்டு திட்டபதிப்பீட்டில் மேலும் 5 கோடி ரூபாய் உதவியதற்காக புரட்சித் தலைவரின் சார்பாக நன்றியைத் தெரிவிக்கின்றேன் இப்படியே நீங்கள் பணம் ஒதுக்கினாலும் கூட இந்தத்திட்டம் முடிவுறுவதற்கு 15 ஆண்டுகளாகும்.

இந்த நேரத்தில் மத்திய அரசு மாநில அரசைப் பார்த்து 50 சதவீதம் செலவுகளை ஏற்றுக்கொள்ள சொல்கின்றது இது எப்படி நடைமுறை சாத்தியம்? இது எந்த அடிப்படையில் கேட்கின்றீர்கள்? இந்த துரித ரயில் திட்டத்தை நடைமுறைப்படுத்துவது யார்? இந்தத்திட்டம் முடிந்ததற்கும் பின்னர் ரயிலை ஓட்டுவது மத்தியஅரசா? மாநில அரசா? கிடைக்கின்ற லாபத்தில் மாநில அரசுக்கும் பங்கு கொடுப்பீர்களா? பங்கு கொடுக்க முடியாது என்றால் எந்த அடிப்படையில் மாநில அரசை செலவினத்திற்கான பங்கு கேட்கின்றீர்கள்.

## ரூ. 50 கோடிநிலம்

50 கோடி ரூபாய் பெறுமான நிலத்தை ஆர்ஜிதம் செய்து கொடுத்த தமிழக அரசை தாங்கள்தானாகமுன் வந்து பாராட்ட வேண்டும். எப்படி கல்கத்தா துரித ரயில் திட்டத்திற்கு நீங்கள் பணம்ஒதுக்கினீர்களோ அக்கறைகாட்டி செயல்படுகிறீர்களோ அது போல் சென்னை ரயில் திட்டத்திற்கான முழுப் பணத்தையும் ஒதுக்குவோம் என்று நீங்கள் ஒத்துக் கொண்டு பங்கு கேட்கும் பதிதாக நீங்கள் எடுத்துக் கொண்ட முடிவு இந்தியாவிலேயே சாலை போக்குவரத்தில் முதலிடம் வகிப்பது தமிழக அரசு தான் இதற்காக தமிழக அரசை பாராட்டி மத்திய அரசும் உலக வங்கியும் பல்வேறு பரிசுகளை அளித்துள்ளன.

ஆகவே இந்தத்திட்டத்தின் கட்டுமானப்பணிகளை மட்டுமல்ல இந்த ரயிலை ஓட்டிப் பெருமை சேர்க்கும் சக்தியும் எங்கள் மாநில அரசுக்கு உண்டு. நான் மத்திய அரசிடம் ஒரு கோரிக்கையை வைக்க விரும்புகின்றேன்.

ஆண்டுக்கு குறைந்தபட்சம் 25 கோடி ரூபாயாவது ஒதுக்கீடு செய்து இந்தத் திட்டப்விரைவில்முடிவடைய முயற்சி செய்யுங்கள் அப்படி உங்களால் ஒதுக்கீடு செய்ய முடியாவிட்டால் நகரத் துரித ரயில் திட்டத்திற்காகத் தனியாக ஒரு கார்ப்பரேஷனை உருவாக்குங்கள் எங்கள் தமிழக அரசு கண்ட வெற்றியைக்காணுங்கள் அதுவும் முடியாது மாநில அரசு பங்குதான் தரவேண்டுமென்று இருந்தால் கட்டும் பணியையும் இயக்கும் பணியையும் மாநில அரசிடம் ஒப்படைத்து விடுங்கள்.

மத்திய அரசிடம் பணம் இல்லை எனவேதான் ஒதுக்கீடு செய்ய முடியவில்லை என்றவாதமும் நிற்கின்றது. 1986 ம் ஆண்டு நவம்பர் மாதம் 5-ம் தேதி நான் கேட்ட வினாஎண். 228-ல் எப்பொழுது இந்தப பணி முடியும் என்று நான் கேட்ட கேள்விக்கு பணவசதியைக் கருத்தாகக் கொண்டுதான் இந்தத்திட்டம் எப்பொழுது முடிவடையும் என்று சொல்ல முடியும் என்று அமைச்சர் குறிப்பிட்டார்.

பணவசதி இல்லை என்று சொல்கின்ற மத்திய அரசு 1987-88 ம் ஆண்டுக்கான ரயில்வே பட்ஜெட்டில் 69 கோடிரூபாயை ரயில்வே மந்திரி உபரியாகக்காட்டுகின்றார் நல்ல மனது கொண்டு இவ் உபரிப் பணத்தை சென்னை துரிதரயில் திட்டத்திற்குஒதுக்கக் கூடாதா?

54 கோடி ரூபாயில் உருவாக்கப்பட்ட இந்தத்திட்டம் நான்கு ஆண்டுகளில் 107 கோடியாக திருத்தி அமைக்கப்பட்டுள்ளது ஒழுங்காகப் பணத்தை நீங்கள் ஒதுக்கீடு செய்யாவிட்டால் இந்தத் திட்டம் 200 கோடி ரூபாயிலும் முடிவு பெறும்.

இந்தச் சட்ட திருத்தத்தை முன்மொழிந்து பேசிய ரயில்வே அமைச்சர் கல்கத்தா சுரங்கரயில்பாதை திட்டம் இந்த அரசின் கவுரவத் திட்டமாகும் என்று குறிப்பிட்டார்.

நான் அவரைக் கேட்டுக் கொள்வதெல்லாம் சென்னை துரித ரயில் திட்டத்தையும், மத்திய அரசின் கவுரவத் திட்டமாக ஏற்று நடத்துங்கள். இதைக் கட்டியமாக அமைச்சர் அவர்கள் மனதில் கொண்டு இரு திட்டத்தையும் ஒன்றுபோல் நினைத்து செயல்படுத்தி பெருமைப்படுவார் என்று நான் நம்புகின்றேன்.

பண ஒதுக்கீடு செய்வதில் அரசு கட்டாயமாக வேகமாக இருக்கவேண்டும் அப்படியென்றால்தான் தாமதமாக நடப்பதனால் வீணாகும் பணத்தை மீதமாக்கி திட்டங்கள் அமல்படுத்த முடியும்

கல்கத்தா ரயில்வே திட்டத்திற்கு ரயில்வே மந்திரி ராக்கெட் வேகத்தில் பணி புரிவதும் பணங்கள் ஒதுக்குதையும் நான் குறைகூறவில்லை பாராட்டுகின்றேன். ஆனால் சென்னை துரித ரயில் திட்டத்திற்கு பண ஒதுக்கீடு செய்வதில் ஆமை வேகத்தில் செல்வது நியாம்தானா? இந்தத் திட்டம் நிறைவேற தாங்கள் சரக்கு ரயில்வேகத்திலாவது முன்வர வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன் அப்படி யானால்தான் 7 வது ஐந்தாண்டுத் திட்டத்தில் இந்த திட்டத்தை முடிப்போம் என்று உறுதி தந்த அமைச்சரின் வாக்குறுதி 8 வது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது முடிவடையும்.

இவ்வாறு நாஞ்சில் வின்செண்ட் நகர துரித ரயில் திட்ட சட்டத்திருத்தத்தில் பேசினார்.



# பச்சையப்பன் அறக்கட்டளை: சமரசம் பாராட்டு

சென்னை நவ 20-

அறக்கட்டளையை அரசு மேற்கொண்ட பிறகு நன்கு நடைபெறுகிறது என சட்டசபையில் கழக உறுப்பினர் டாக்டர் சமரசம் கூறினார்.

சட்டசபையில் பச்சையப்பன் அறக்கட்டளைமேலாண்மையை மேற்கொள்ளும் சட்டமுன் வடிவு மீதான விவாதத்தில் கழக உறுப்பினர் டாக்டர் சமரசம் பேசுகையில் கூறியதாவது:-

அறக்கட்டளைகளை நிறுவுபவர்கள் தனது எண்ணம், செயல், கோட்பாடு ஆகியவை உலகம் உள்ள வரை நீடித்திருக்கவேண்டும் என்ற எண்ணத்தில் நிறுவுகிறார்கள்.

இந்த பச்சையப்பன் அறக்கட்டளைதான் தமிழகத்தில் பல்வேறு துறை வல்லுநர்களை உருவாக்கியுள்ளது பச்சையப்பன் அறக்கட்டளையை பார்த்த பிறகுதான் செங்கல்வராயன் போன்ற பலர் தனது சொத்துக்களை பச்சையப்பன்அறக்கட்டளை நிர்வாகம் செய்ய எழுதி வைத்தார்கள்.

எதற்காக அவர்கள் எழுதி வைத்தார்களோ அது நிறைவேறாததால் அரசே மேற்கொள்ள வேண்டியுள்ளது.

கல்லூரி, தொழில் நுட்ப கல்லூரி, மேல் நிலைப்பள்ளி போன்று 17 நிறுவனங்களை அறக்கட்டளை நடத்தி வருகிறது.

அறக்கட்டளை இப்படித் தான் இருக்க வேண்டும் என்று இந்தியாவிலுள்ள அறக்கட்டளைகளுக்கு வழிகாட்டியாக பச்சையப்பன் அறக்கட்டளை விளங்குகிறது

அரசு மேற்கொள்வதற்கு முன்பு பெறப்பட்ட கடனை கொடுக்க முடியாகுதால் அறக்கட்டளைக்கு வரவேண்டிய வைகளை பெறமுடியாயாமல் இருந்தது இப்போது அரசு ஏற்று நடத்துவதால் கடன்கள் அடைபட்டிருக்கின்றன.

புதிய நிர்வாகம் அறக்கட்டளை அமைத்தவர்களின் உணர்வுகளை நிறைவேற்றும் வகையில் சிறப்பாக செயல்பட்டு வருகிறது 145 வது ஆண்டு விழாவை டிசம்பரில் கொண்டாட நிறுவனம் ஏற்பாடு செய்து வருவது மகிழ்ச்சிக்குரியது.

இவ்வாறு டாக்டர் சமரசம் கூறினார்.



# சென்னையில் நாடக விழா

சென்னை, நவ. 20-

சென்னையில் இம்மாதம் 23ந் தேதி முதல் 29ந் தேதி வரை நாடக விழா நடைபெறுகிறது வாணி மகாலில் இந்த விழாக்கள் நடைபெறுகின்றன இந்த விழாவை ஆளுநர் குரானா துவக்கி வைக்கிறார் விழாவில்இரண்டு தமிழ் நாடகங்கள் இரண்டு மலையாள நாடகங்கள் இரண்டு கன்னட நாடகங்கள் நடத்தப்படுகின்றன,

இந்த விழாவை யொட்டி மியூசிக் அகாடமியில்நாடகங்கள் பற்றிய கருத்தரங்கு 24ந் தேதி முதல் 29ந் தேதி வரை தினமும் காலை 10 மணிக்கு நடைபெறுகிறது.

இந்த விழாவை சங்கீத நாடக அகாடமியும் தமிழ் நாடு இயல் இசை நாடக மன்றமும் இணைந்து நடத்துகிறது.

மேற்கண்ட தகவல்கள் சங்கீத நாடக அகாடமியின் செய்தி குறிப்பில் கூறப்பட்டுள்ளது.

# சினிமா தொழிலாளர்கட்கு இலவச மருத்துவ உதவி

சென்னை, நவ. 20-

தென்னிந்திய திரைப்பட ஊழியர்களின்ஒருங்கிணைப்பு சங்கம் ('சேப்' யூனியன்) திரைப்பட ஊழியர்கட்கு இலவச மருத்துவ உதவியை ஒவ்வொரு மாதமும் மூன்றாவது சனிக்கிழமை வழங்க உள்ளது.

இந்த மருத்துவ உதவி துவக்க விழாநாளை [21-ந் தேதி] காலை 10 மணி அளவில் திரைப்படவர்த்தக சபை கட்டிடத்தில் நடைபெறுகிறது. திரைப்பட ஊழியர்கள் இந்த வாய்ப்பை பயன்படுத்திக் கொள்ளுமாறு இந்த அமைப்பின் தலைவர் கே. சங்கர், கவுரவச் செயலாளர்கள் பி. மாதவன் சார்லஸ் ஆகியோர் கேட்டுக் கொண்டுள்ளனர்.

# ரெயில் பாதையில் பாறாங்கல்-போக்குவரத்து பாதிப்பு

மதுரை, நவ 20-

தென்னக ரெயில்வேயின் மதுரை டிவிஷனில் ரெயில் பாதையில் பாறாங்கல் இருந்ததால்போக்குவரத்து பாதிக்கப்பட்டது

தென்மலை [illegible] ரெயில் நிலையங்களுக்கு இடையே ரெயில் தண்டவாளத்தில் ஒரு பெரிய பாறாங்கல் உருண்டு வந்து பாறாங்கல் கிடந்தது. இதனால் அப்பகுதியில் ரெயில் போக்குவரத்து 6மணி நேரம் பாதிக்கப்பட்டது.

மழை காரணமாக ரெயில் தண்டவாளத்திற்கு அருகில் இருந்த மலையில் இருந்து இந்த பாறாங்கல் உருண்டு வந்திருக்கக்கூடும் எனத்தெரிகிறது.

காங்மேன் இந்த கல்லைப் பார்த்து அருகில் இருந்த ரயில் நிலையத்தில் தெரிவித்தார்.

பாறாங்கல்லை வெடி வைத்து தகர்த்து அப்புறப் படுத்தினர்.

# அமெரிக்க எம்.பி.களிடையே கோர்பசேவ் பேசுவார்

வாஷிங்டன், நவ. 20-

அமெரிக்க எம். பி. க்கள் கூட்டத்தில் சோவியத் அதிபர் கோர்பசேவ் பேச இருக்கிறார்.

அடுத்த (டிசம்பர்) மாதம் கோர்பசேவ் அமெரிக்கா செல்கிறார். அமெரிக்காவில் அவர்பங்குபெறும்நிகழ்ச்சிகள் குறித்து ரஷ்ய. அமெரிக்க அதிகாரிகள் ஆலோசித்து வருகிறார்கள் அமெரிக்காவில் எம். பி. க்கள் கூட்டத்தில் கோர்பசேவ் பேச இருக்கிறார் அதேபோல் சோவியத் டெலிவிஷனுக்கு அமெரிக்க ஜனாதிபதி ரீகன் பேட்டி அளிக்கிறார்.

ஆயுதக் குறைப்பு பற்றி இரு தலைவர்களும் ஒரு உடன்படிக்கையில் கையெழுத்திடவும் ஏற்பாடுகள் நடக்கின்றன.

கோர்பசேவின் அமெரிக்க பயணத்தினால் அமெரிக்க ரஷ்யா நாடுகளிடையே உள்ள கசப்புணர்வு மறையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

சோவியத்தின் முந்தைய தலைவர்கள் சிலரின் செயல்களை பகிரங்கமாக விமர்சித்து, பரபரப்பு ஏற்படுத்தும் கோர்பசேவ் அமெரிக்க உறவு விஷயத்திலும் ஒரு பரபரப்பான முடிவை ஏற்படுத்துவார்என்று கருதப்படுகிறது.

# ஓட்டலில் அனுமதியின்றி மதுவிற்றவர்கள் கைது

சென்னை, நவ. 20

போரூரில் அனுமதிபெறாமல் ஓட்டலில் சாராயம், மற்றும் பீர், பிராந்தி ஆகியவற்றை விற்றதாக சர்வர் ராமகிருஷ்ணன் ஓட்டல் அதிபர் விஜயகுமார் ஆகிய இருவரையும் போலீசார் கைது செய்தனர்.

# திருட்டு வீடியோ: கடும் தண்டனை தர சட்டம் நிறைவேறியது

சென்னை, நவ. 20-

வீடியோ திருட்டுக்கு கடும் தண்டனை தர வகை செய்யும் சட்டம் நிறைவேற்றப் பட்டது.

சட்டசபையில்திரையரங்கு சட்டத்திருந்த மசோதா வீடியோ சட்ட மசோதா ஆகியவை மீதான விவாதத்திற்கு பதிலளித்து அமைச்சர் வி.வி.சுவாமிநாதன் பேசுகையில் கூறியதாவது:-

திரையரங்குகளில்சுகாதார வசதி போதிய காற்று வசதிகள் இல்லை என்றார்கள் குறிப்பிட்ட அளவுக்கு மேல் ஆள்கள் இருந்தாலும் சுகாதார வசதிகள் குறைந்திருந்தாலும் குளிர் சாதன வசதி இயங்காமலிருந்தாலும் அதிபர்கள் தண்டிக்கப்படுகிறார்கள்.

ஆபாச படம் காட்டிய 2 தியேட்டர்களின் லைசென்ஸ் 3 மாத காலத்திற்கு ரத்து செய்யப்பட்டது.

திருட்டு வீடியோவினால் நகராட்சிகளின் வருமானம் குறைந்திருக்கிறது குஜராத் மற்றும் கர்நாடகாவில் பல தியேட்டர்கள் மூடப்பட்டு அவை சிமெண்ட் கிடங்குகளாக மாற்றப் பட்டுள்ளன.

திரைப்படங்கள் வெளியிடுவதற்கு முன்பு முதல் நாளே வெளிநாட்டு உரிமைக்கு தந்து விடுவதால் அதுகாலையில் விமானத்தில் போய் மாலையில் திருட்டு வீடியோவாக வந்து விடுகிறது.

மனிதன் படத்தில் தயாரிப்பாளர் ரகசியமாக அடையாளம் வைத்திருந்ததால் கண்டு பிடித்தார்கள் என்று ரகுமான்கான் பேசினார்.

முதல்வர்புரட்சித்தலைவா என்னை அழைத்து திருட்டு வீடியோவை கடுமையாக்க வேண்டும் என்றார்.

தூத்துக்குடிபாலகிருஷ்ணா தியேட்டரில் ஓடும் படத்தில் இருந்து திருட்டு வீடியோ எடுக்கப்பட்டது என்பதை கண்டுபிடிக்க இங்கிருந்து ஒரு படத்தை எடுத்துச் சென்று போட்டு பார்த்து ரகசிய போலீசார் பாலகிருஷ்ணா தியேட்டர் உரிமையாளர் மேனேஜர் படம் ஓட்டுபவர் ஆகிய மூவரையும் கைது செய்தனர் தென்னாற்காடு மாவட்டத்தில் 2பேரும் வடாற்காடு மாவட்டத்தில்2பேரும்இன்று காலை வள்ளியூரில் ஒருவரும் மனிதன் திருட்டு வீடியோ சம்பந்தமாக கைது செய்யப்பட்டனர்.

தயாரிப்பாளர்கள் தாங்கள் தயாரிக்கும் படத்தின் வீடியோ உரிமை தருவதில்லை என்று முடிவு எடுத்தால் உதவியாக இருக்கும்.

வீடியோ கடைகளில் படத்தின் கேசட் கவர்களில் வேறுபடத்தின் பெயரை எழுதிவைத்து விடுகிறார்கள்.

முன்பு ஆண்டுக்கு 20 படங்கள் நூறுநாட்கள் ஓடின. இப்போது 4 படங்களே நூறுநாட்கள் ஓடுகின்றன.

மலேசியாவில் மனிதன் பட வீடியோ உரிமையை ஒருவர் கேட்டார் தயாரிப்பாளர் தரவில்லை ஆனால் படம் வெளியாகும் அன்று அங்கிருந்து வரும் தினமணி பத்திரிக்கையில் மனிதன் பட கேசட் கிடைக்கும் என்று விளம்பரம் வந்தது.

நமது புரட்சித் தலைவர் அரசு மலேசிய அரசுக்கு சொல்லி வீடியோ திருட்டை தடுக்கச் செய்திருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் வி.வி சுவாமிநாதன் கூறினார்.

பின்னர் சட்ட மசோதாக்கள் நிறைவேறின.

# நெல்லை மாவட்டம்: ரூ. $8\frac{1}{4}$ கோடி நகை-பயிர் கடன் உதவி

திருநெல்வேலி நவ. 20-

மத்திய கூட்டுறவுவங்கியின் மூலம் 86கோடியே25லட்ச ரூபாய் நகை மற்றும் பயிர் கடன்களாக வழங்கப்பட உள்ளன.

திருநெல்வேலி மத்திய கூட்டுறவு வங்கியின் தனி அதிகாரிநாகேந்திரன் இணை பதிவாளர் வெங்கிடாசலம் ஆகியோர் நிருபர்களுக்கு பேட்டி அளித்தனர்.

பேட்டியின் போது அவர்கள் கூறியதாவது:-

திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்திற்கு 87-88 ம் வருடத்திற்கு நகை மற்றும் பயிர்க் கடன்களுக்கு ரூபாய் $8\frac{1}{4}$ கோடி அனுமதிக்கப்பட்டிருக்கிறது. இதுவரை $3\frac{1}{2}$ கோடி வரை நகை பயிர்க் கடன்கள் வழங்கப்பட்டிருக்கிறது. வறட்சி நிலை காரணமாக வேகமாக கொடுக்க முடியவில்லை இனி வேகமாக கொடுக்கப்படும் முதல்வர் உத்தரவின் பேரில் மழை விழுந்தவுடன் உடனே பயிர்களுக்கு உரம்கேட்டவர்களுக்கு கொடுத்து கொண்டிருக்கிறோம் கிராம வங்கி கூட்டுறவு வங்கி மூலமாக வழங்கபபடும் கடன்கள் உடனே கொடுக்க சொல்லி உத்தரவு போட்டிருக்கிறோம் தாமதம் தவிர்க்கப்படும்.

ஏற்கனவே கடன் வாங்கியவர்கள் வாங்கிய பணத்தில் 80சதவீதம் கட்டியிருந்தால் மீண்டும் அவர்களுக்கு கடன் வழங்கப்படும் வாங்கிய கடனை குறித்த தவணையில் செலுத்தினால் $11\frac{1}{2}$ சதவிகித வட்டிக்குபதில் $8\frac{1}{2}$ சதவிகிதம் வட்டிதான் வசூலிக்கப்படுகிறது.

31 3-86முதல்இந்தமாவட்டத்தில் வட்டிதள்ளுபடி செய்யப்பட்ட நபர்கள் 28,849 நபர்கள் இவர்களுக்கு அரசு அளித்த சலுகை $1\frac{1}{2}$ கோடி ரூபாய்.

நமது கூட்டுறவு வங்கியில் முதலீடு மொத்த 25 கோடி ரூபாய் 2மாவட்டங்களையும் சேர்த்து வழங்கப்பட்ட கடன்கள் மொத்தம் 35 கோடி ரூபாய். நமது வங்கி மட்டும் தான் இந்த மாவட்டத்தில் முதலீடு வசூல் செய்து இந்த மாவட்டங்களுக்கேசெலவு செய்கிறோம் மற்ற வங்கியில் அப்படி இல்லை.

வாசுதேவ நல்லூரில் அமைந்திருக்கும் சர்க்கரை ஆலைக்கு சப்ளைசெய்ய கரும்பு பயிர் செய்யும் சாகுபடியாளர்களுக்கு ரூபாய்80 லட்சம் வரை கடன்கொடுக்க இருக்கிறோம் இந்த மாவட்டத்தில் கூட்டுறவு மூலம் இயங்கும் ரேஷன் கடைகள் மொத்தம் 841 அதன் மூலம் கட்டுபாடு பொருள்களும் கட்டுபாடற்ற பொருள்களும் 1-4-87 முதல் 30.10 87 வரை 11 கோடி 90 லட்சம் ரூபாய் வரை விற்பனை நடந்திருக்கிறது.

இவ்வாறு பேட்டியின் போது இரு அதிகாரிகளும் தெரிவித்தனர். பேட்டியின் போது மத்திய கூட்டுறவு வங்கியின் செயலா கந்தசாமியும் உடன் இருந்தார் கூட்டுறவு ஒன்றிய தனி அதிகாரி ராகவன் பிள்ளையும் உடன் இருந்தார்.

# அறிவிப்பு

மதுரை மாநகர் மாவட்ட வட்டக் கழக நிர்வாகிகள் கூட்டம் தல்லாகுளம் பெரியார் மாளிகையில் நாளை 21ம் தேதி காலை 10 மணி அளவில் அவைத் தலைவர் லட்சுமி நாராயணன் தலைமையில் நகர் கழக துணைச் செயலாளர் தங்கம் முன்னிலையில் நடைபெறுகிறது. நன்றியுரை நகர கழக பொருளாளர் ஜனார்த்தனன்.

நிர்வாகிகள் அனைவரும் கலந்து கொண்டு ஆலோசனைகளை வழங்கவேண்டுகிறேன்,

இவண்
சோ. நவநீதகிருஷ்ணன்
மதுரை நகர் மாவட்டக் கழகச் செயலாளர்

# மதுரை மாநகர் மாவட்ட செயல்வீரர்கள் கூட்டம்

மதுரை மாநகர் மாவட்ட செயல் வீரர்கள் கூட்டம் 22-ந் தேதி காலை 10 மணி அளவில் ரீகல் திரைஅரங்கில் நடைபெறுகிறது.

மதுரை மாநகர் 65 வார்டுகளிலும், கழகக்கொடி ஏற்றி பேரறிஞர் அண்ணா, பசும்பொன்முத்துராமலிங்கத்தேவர், அம்பேத்கார் வைத்தியநாதன் ஆகியோர் சிலைக்கு மாலை அணிவிக்கப்படும்.

ரீகல் திரையரங்கில் செயல் வீரர்கள் மத்தியில் அமைச்சர் கே.கே.எஸ்.எஸ்.ஆர்.ராமச்சந்திரன் பேசுகிறார். செயல் வீரர்கள் கூட்டத்தில் மாநகர்மாவட்ட அவைத்தலைவர் லட்சுமி நாராயணன் துணைச் செயலாளர் சி. தங்கம் பொருளாளர் ஜனார்த்தனன், சேடப்பட்டி முத்தையா எம்.எல்,ஏ பொ. அன்பழகன் எம்.எல்.ஏ. ஜக்கையன், அன்னம்மாள், ராமலிங்கம் சேக்பரீத் ஆகியோர் பங்கேற்கின்றனர் கழக மன்ற மகளிர் மாணவ தொழிற்சங்க இளைஞர் அணி செயல் வீரர்கள் கலந்துகொண்டு சிறப்பிக்கவேண்டுகிறேன்.

இவண்
சோ. நவநீதகிருஷ்ணன்
மதுரை மாநகர் மாவட்ட கழகச்செயலாளர்

# சமூக நலத்துறை

அரசாணை (நிலை) எண். 236[6]
நாள்: 19-11-87

நிலம் கையகப்படுத்துதல், சட்டத்தின் 6-ஆம் பிரிவின் கீழான விளம்பல்

# அறிவிக்கை

கீழ்க்கண்ட விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள நிலங்களை ஒரு பொது நோக்கத்திற்காக கையகப்படுத்த வேண்டியுள்ளதென்று தமிழ்நாட்டு அரசு மன நிறைவடைந்திருப்பதோடு இந்நிலங்களுக்கு வழங்கப்பட வேண்டிய இழப்பீட்டுத் தொகை முழுவதும் பொது வருவாய்களிலிருந்து செலுத்தப்பட வேண்டும் என்றும் அவ்வரசால் ஏற்கனவே முடிவெடுக்கப் பட்டுள்ளது. ஆகவே 1894-ம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் [மையச்சட்டம் 1-1894] 6 ஆம் பிரிவின்படி தமிழ்நாட்டு ஆளுநர் அவர்கள் கீழ்கண்ட விவர அட்டவணையில் குறிப்பிட்டுள்ளதும் 3.97 ஏக்கர் கொண்ட அதே அல்லது சற்று கூடுதலாகவோ குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலங்கள் ஒரு பொது நோக்கத்திற்காக அதாவது ஆதிதிராவிடர்களுக்கு தேவைப் படுகின்றன என்று இதன் மூலம் அறிவிக்கிறார்.

இந்நிலங்களின்வரைபடங்கள் குடியாத்தம் ஆதிதிராவிடர் நல தனி வட்டாட்சியர் அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ளன. அவற்றை அலுவலகப் பணி நேரத்தில் எப்போது வேண்டுமானாலும் பார்வையிடலாம்.

விவர அட்டவணை

மாவட்டம்: வடாற்காடு வட்டம். வாணியம்பாடி
கிராமம்: சோலூர்

| நன்செய் அல்லது புன்செய் என்று நிலத்தின் விவரிப்பும் புல எண்ணும் | நிலச் சொந்தக்காரரின் (பட்டாதாரரின்) அல்லது அனுபவதாரரின் பெயர் | கையகப்படுத்த உள்ள பரப்பளவு ஏக்கரில் | தரிசா அல்லது பயிரிடத் தக்கதா? (மரங்கள் கட்டடங்கள் கிணறுகள் ஆகியவற்றைக் குறிப்பிடவும்) |
|---|---|---|---|
| சர்க்கார் புஞ்சை 42.1பி | டி.எம்.டி. முருகேசன் எம், டி. சுப்பிரமணியன் | 0.38 | புஞ்சை சாகுபடி |
| 89-1 | -do- | 2.78 | செய்யத் |
| 42-2எ | எம், டி. சுப்பிரமணியன் | 0.81 | தக்கது |
| | | 3.97 | |

சோ. குமாரசுவாமி
அரசு துணைச் செயலாளர்
சமூக நலத்துறை

DIPR 423 NA 87 MAA

# உதகை: கலர் போட்டோ தொழிற்சாலை: ராசாராம் வலியுறுத்தல்

சென்னை. நவ. 20- இந்துஸ்தான் கலர் போட்டோதொழிற்சாலை உதக மண்டலத்தில் அமைக்கப்பட வேண்டும். அதற்கான அனைத்து வசதிகளும் அங்கே உள்ளன. என்று அமைச்சர் ராசாராம் வலியுறுத்தினார்.

மத்தியதொழில் அமைச்சர் ஜே. வெங்கல்ராவுக்கு இந்துஸ்தான் வர்த்தகசபை வரவேற்பு அளித்தது இந்த நிகழ்ச்சிக்கு தமிழக தொழில் அமைச்சர் கே ரசாராம் தலைமை வகித்தார் இந்துஸ்தான் வர்த்தக சபைத் தலைவர் அசோக் கம்பாட் வரவேற்றுப்பேசினார். அமைச்சர் ராசாராம் தமது தலைமையுரையில் கூறியதாவது:-

இந்தியாவிலேயே தொழில் வளர்ச்சியில் தமிழகம் 3வது இடத்தை பெற்றுள்ளது புரட்சித்தலைவர் ஆட்சியில் தமிழகம் தொழில் வளர்ச்சியில் மேன்மேலும் பல்வேறு வகைகளில் முன்னேற்றம் அடைந்து வருகிறது.

தொழி அனுமதி வேண்டி கடந்த 1978 ஆம் ஆண்டில் பதிவுசெய்துள்ளஎண்ணிக்கை 8ஆயிரத்து 808 ஆனால் நடப்பு ஆண்டில் ஜூன் மாத கணக்குப்படி இந்த எண்ணிக்கை 13ஆயிரத்து 687 ஆக உயர்ந்துள்ளது பல்வேறு தொழில்களுக்கு அனுமதி கோரி மத்திய அரசுக்கு தமிழக அரசு வேண்டுகோள் விடுத்துள்ளது ஆனால் அனுமதி கிடைத்தபர்டில்லை. அவற்றை விரைவில் கொடுக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்

சிறு தொழில் அனுமதி கோரி கடந்த1978ல் 18 ஆயிரத்து 789 பேர் பதிவு செய்துள்ளனர், கடந்தமார்ச்மாத நிலவரப்படி இந்த எண்ணிக்கையும் 82 ஆயிரமாக உயர்ந்து விட்டது.

தொழில் இல்லா மாவட்டம் என்ற நிலைமையை நீக்கிவிட்டு தொழில் இல்லா தாலுகாக்கள் என்ற ரீதியில் மத்திய அரசு திட்டம் போட வேண்டும் அப்போது தான் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும்தொழில் முன்னேற்றம் ஏற்பட வாய்ப்பு ஏற்படும்.

உதகமண்டலத்தில்இந்துஸ்தான் கலர் போட்டோ தொழிற்சாலை அமைவதற்கு சாதகமான சூழ்நிலை இருந்து வருகிறது மாசு ஏற்படாத நிலையில் நிலப்பகுதி உள்ளது நல்ல தண்ணீரும் அங்கே ஏராளம் கிடைக்கிறது கலர் போட்டோ தொழிற்சாலை அமைவதற்கேற்ப சாத்யக் கூறுகள் நிறைய இருக்கின்றன ஆகவே இந்த தொழிற்சாலை உதக மண்டலத்தில் விரைவில் ஏற்பட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

சிர்கோனியம் மற்றும் டிட்டானியம் உலோக உற்பத்தி செய்வதற்கான தகுந்த இடம் தூத்துக்குடி அருகே உள்ள பழைய காயல் கிராமம்தான் நிலப்பரப்பு மின்சாரவசதி தண்ணீர்சப்ளை முதலிய அனைத்து வசதிகளையும் தமிழகஅரசு செய்து தர தயாராக இருக்கிறது.

தேர்வுக்குழுவினரும் இந்த இடத்தை பார்வையிட்டு ஒப்புதல் அளித்துள்ளனர் பழயகாயல் கிராமத்தில் இந்த தொழிற்சாலைஅமைய மத்திய அரசு விரைவில் அனுமதி அளிக்க வேண்டும்.

ராணுவத்துறை சார்பில் தொலை தூர நோக்கு பிரிவு நீலகிரியில் அமையவேண்டும் தேர்வுக்குழுவும் நீலகிரி மாவட்டம் உதகமண்டலத்தை இதற்காக தேர்ந்தெடுத்துள்ளது.

சிதம்பரம் அருகே புவனகிரிமற்றும் நரிமணம்கோவில் களப்பால் முதலிய இடங்களில்எண்ணெய் வாயு அபரிமிதமாக கிடைக்கிறதுஅதைப் பயன்படுத்தி மின் சாரம் உற்பத்தி செய்வதற்கு மத்திய அரசுஅனுமதி தர வேண்டும்

இவ்வாறு அமைச்சர் ராசாராம் கூறினார்.

மத்திய தொழில் அமைச்சர் வெங்கல்ராவ் பேசுகையில்மாநில அரசுகள் மின் உற்பத்திக்கு முதலிடம் அளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

மின் உற்பத்தி பெருகினால் தான் தொழில் வளம் பெருகும் என்றும் அவர் குறிப்பிட்டார் ஆஸ்திரேலியாவில் இருந்து நிலக்கரி இறக்குமதி செய்தால் அதற்காக அதிக செலவு செய்ய வேண்டியிருக்கும் என்றும் அவர் கூறினார்.

வளர்ச்சித்திட்டங்கள் சீரிய முறையில் செயல்படுவதற்கு மக்கள் பெருக்கம் தடையாக இருக்கிறது.

மக்கள் பெருக்கத்தை கட்டுப்படுத்தியாக வேண்டும் அணுகுண்டு உற்பத்தியைவிட மக்கள் பெருக்கம் மிகவும் ஆபத்தானது.

இவ்வாறு வெங்கலராவ் கூறினார்.

இந்துஸ்தான் வர்த்தக சபையைச்சேர்ந்த ராஜீவ் ராஜ் நன்றி கூறினார்.

## சென்னையில் குடும்ப நல கருத்தரங்கு

சென்னை, நவ. 20 குடும்பநலம் பற்றிய கருத்தரங்கம் சென்னைபிரசிடென்சி கல்லூரியில் நடந்தது.

இந்த நிகழ்ச்சியில் சென்னை மாவட்ட ஆட்சித் தலைவர் புஜங்கராவ் குடும்ப நலத்துறை இயக்குனா கரியாலி கல்லூரி முதல்வர் சுப்ரமணியம் மற்றம் பலர் கலந்து கொண்டு உரையாற்றினர்.

குடும்ப நலம்பற்றிய பேச்சுப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு பரிசுகளும் வழங்கப்பட்டன. தமிழ் பேச்சுபோட்டியில் கண்ணன் முதல்பரிசையும் ஜெயந்தி இரண்டாவது பரிசையும் பெற்றனர். ஆங்கிலத்தில் சுதா முதல் பரிசும் கவிதா தாமஸ் இரண்டாவது பரிசினையும் பெற்றனர்.

கல்லூரிப் பேரவைச் செயலாளர் பிரதாப்குமார் அனைவரையும் வரவேற்று நன்றி கூறினார்.

# இனியும் போர் வேண்டாம் விடுதலைப்புலிதொண்டர்கள்முடிவு

புதுடெல்லி, நவ. 20- இனியும் போர் நடத்த வேண்டாம், ஆயுதத்தை ஒப்படைக்கப் போகிறோம் என்று விடுதலைப்புலிகள் இயக்கத் தொண்டர்கள் கருத்துத் தெரிவித்துள்ளனர்.

விடுதலைப்புலிகள் இயக்க தொண்டர்களில் பலர் இந்திய - இலங்கை உடன்பாட்டை வரவேற்றுள்ளனர்.

இந்தியப்படையில் பல தமிழர்கள் உள்ளனர் அவர்களை எதிர்த்து வீணாக சண்டைபோட வேண்டியதில்லை என்று விடுதலைப் புலிகள் கருதுகிறார்கள். விடுதலைப் புலிகளின் ஆயுதகிடங்குகளை இந்திய வீரர்கள் கண்டுபிடித்து அழித்து வருகிறார்கள் யாழ்ப்பாணம் தமிழர்கள் பலர் நமது வீரர்களுக்கு உதவியாகவிடுதலைப் புலிகளின் ஆயுத கிடங்குகளை அடையாளம் காண்பித்து வருகிறார்கள்.

சுதுமலை பகுதியில் பெரிய ஆயுத கிடங்கு ஒன்று கண்டு பிடிக்கப்பட்டது.

அங்கிருந்து 700 வெடி குண்டுகள் துப்பாக்கிகள் மற்றும் ஆயுதங்கள் கைப்பற்றப்பட்டன.

## கடாபியிடம் உதவி கோரல்

லிபிய நாட்டுத் தலைவர் கடாபியிடம் விடுதலைப் புலி இயக்கத்தலைவர்பிரபாகரன் உதவிகேட்டு கடிதம் எழுதியுள்ளார் 1985 ல்பிரபாகரன் அவருக்கு எழுதிய கடிதத்தின் நகல்,இந்திய வீரர்களால் கைப்பற்றப்பட்டுள்ளது.

கடாபி உதவி அளித்தாரா என்பது குறித்த விவரங்களை அதிகாரிகள் விசாரித்துவருகிறார்கள்.



# ரூ.75ஆயிரம் மதிப்புள்ள பாம்புத் தோல்கள் சென்னையில்பறிமுதல்

சென்னை, நவ. 20- சென்னை விமானநிலையத்தில் 75ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள பாம்புத் தோல் பார்சல் இருந்தது கண்டு பிடிக்கப்பட்டது. வெளிநாட்டுக்கு அனுப்புவதற்காகவைக்கப்பட்டிருந்த அந்த பாம்புத் தோலை அதிகாரிகள் பறிமுதல் செய்தனர்.

பாம்பு தோல்களை வெளிநாடுகளுக்கு அனுப்பும் கும்பலை பிடிப்பதில் வன இலாகா அதிகாரிகள் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர் இதனடிப்படையில் சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்துக்கு உதவ்வன பாதுகாவலர் எம் ராமமூர்த்தி தலைமையில் வன இலாகா அதிகாரிகள் எம். முனுசாமி, எஸ். நாகராஜன், உதயசங், டி. மோகன் ஜே. கோபு ஆகியோர் சென்றனர்.

### சோதனை

விமானம் மூலம் பாம்பு தோல் பார்சல் அனுப்பப்படுகிறதா என்று சந்தேகப்பட்ட பார்சல்களை அதிகாரிகள் சோதனை போட்டனர் பதப்படுத்தப் பட்ட ஆட்டுத்தோல் மூட்டைக்குள் பாம்புத் தோல்கள் பதுக்கி வைக்கப்பட்டிருந்தன 1845 நாகப்பாம்பு தோல்கள் இருந்தன இவற்றின் மதிப்பு 75 ஆயிரம் ரூபாய் இந்த தோல்களை அதிகாரிகள் பறிமுதல் செய்தனர்

பாம்புதோல் மறைத்து வைத்திருந்த பார்சல் டெல்லிக்கு அனுப்புவதற்காக வைக்கப்பட்டிருந்தது. அதில் அனுப்பியவர் விலாசம் இருந்தது. அதை வைத்து அதிகாரிகள் சோதனை நடத்தியபோது அது போலி முகவரி என்று தெரிந்தது.

பாம்பு தோலை வெளி நாட்டுக்கு கடத்த முயன்ற ஆசாமியை பற்றி அதிகாரிகள் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

## அரக்கோணம் மேல்நிலைப்பள்ளி என்.எஸ் எஸ். துவக்கம்

அரக்கோணம், நவ. 20- அரக்கோணம் மேல்நிலைப் பள்ளி வளாகத்தில் நாட்டு நலப்பணித்திட்டம் (என். எஸ். எஸ்) துவக்கவிழா நடைபெற்றது. அரக்கோணம் ஊராட்சி ஒன்றிய ஆணையாளர் சாஹன்னா ராஜம்தலைமை தாங்கினார் அரக்கோணம் நகர காவல் துறை ஆய்வாளர் திருநாவுக்கரசு திட்டத்தை துவக்கி வைத்து சிறப்புரை ஆற்றினார். இதற்கான ஏற்பாடுகளைபள்ளிதலைமை ஆசிரியர் க. கண்ணப்பன், நாட்டு நலப்பணித்திட்டத்தின் திட்ட அலுவலர் யு.என். ஜெயவேல் ஆகியோர் சிறப்பாக செய்திருந்தனர்.

## குடிநீர் திட்டப்பணிகள்: உக்கம்சந்த் பார்வையிட்டார்

செங்கல்பட்டு, நவ. 20- செங்கல்பட்டு மாவட்டம் குன்றத்தூர் ஒன்றியம் முகலிவாக்கம் ஆஸ்வாஞ்சேரி மணப்பாக்கம் மேட்டுக்காலனி, அம்பேத்கார் நகர், கௌப்பாக்கம் கருகம்பாக்கம், பெரியமணிச்சேரி, கோவூர், தரம்பாக்கம் மூன்றாங்கட்டளை, இரண்டாங்கட்டளை, தண்டலம் திருமுடிவாக்கம், மலையம்பாக்கம், குன்னச்சேரி சிங்கராயபுரம் தொழுகுமாணிக்கம், நடுவீரப்பட்டு மாங்காடு பரணிபுத்தூர் மற்றும் அய்யப்பன் தாங்கல் ஆகிய கிராமங்களில் நடைபெறும் குடிநீர் திட்டப்பணிகளை தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் உக்கம்சந்த் பார்வையிட்டார்

## டி. வி. எஸ். கம்பெனியில் திருட்டு: ஆசாமி கைது

சென்னை, நவ 20- டி.வி எஸ்.குருப் கம்பெனிகளின் ஸ்டோர்ஸ் ராதா கிருஷ்ணன் சாலையில் உள்ளது. அங்கு இரவில் பூட்டை உடைத்து 30 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள பொருட்களையும் பணப் பெட்டியையும் யாரோ திருடிச் சென்று விட்டனர்.

இதுகுறித்து மைலாப்பூர் குற்றப்பிரிவு இன்ஸ்பெக்டர் குழந்தைகனி விசாரித்து வந்தார். திருடுபோன இடத்திற்கு பக்கத்தில் இருந்த வீட்டின் காம்பவுண்டில் திருடிய பணப் பெட்டியை புதைத்து வைத்திருந்ததை திருடன் தோண்டி எடுத்த போது பொதுமக்கள் பிடித்தனர்.

அந்த திருடனின் பெயர் கோவிந்தராஜ் [வயது 18) ராயப்பேட்டை ரோட்டரி நகரைச்சேர்ந்த இவன் பல வழக்குகளில் சம்பந்தப் பட்டவன்.

# 18 இந்திய வீரர்களை புலிகள் ஒப்படைத்தனர்

கொழும்பு, நவ. 20- பிடித்து வைக்கப் பட்டிருந்த 18 இந்திய ராணுவ வீரர்களை விடுதலைப்புலிகள் ஒப் படைத்தனர்.

விடுதலைபபுலிகள் இயக்க துணைத்தலைவர மாத்தையா சாவகச்சேரிக்கு மாலை 5.15 மணிக்கு பிடிக்கப்பட்ட 9வீரர்களுடன் வந்து அவர்களை இந்திய ராணுவத்திடம் ஒப்படைத்தார் மற்ற 9இந்திய வீரர்களை விடுதலைப்புலிகள் இயக்கத்தைச்சேர்ந்த சங்கர் ஒப்படைத்தார்.

இந்தியவீரர்களை விடுதலைப் புலிகள் புத்தூரில் பிடித்து வைத்திருந்தனர்.

அவர்களுக்கு விடுதலைப் புலிகள் லுங்கி கொடுத்திருந்தனர்.

சாவகச்சேரி மாவட்ட மாஜிஸ்திரேட் கோர்ட்டில் பத்திரிகையாளரும் இந்திய செஞ்சிலுவை சங்கத்தினரும் திரண்டிருந்தனர். 18 வீரர்களையும் இந்திய அமைதிப் படை பிரிகேடியர்தில்லானிடம் விடுதலைப்புலிகள் ஒப் படைத்தனர்.

விடுவிக்கப்பட்டவர்களில் மகர் ரெஜிமெண்டைச் சேர்ந்தவர்கள் 17 பேர் சீக்கிய ரெஜிமெண்டைச் சேர்ந்தவர் ஒருவர்.

விடுதலைப்புலிகள் இயக்கத் துணை தலைவா மாத்தையா நிருபர்களிடம் கூறியதாவது:-

இந்திய வீரர்களை விடுதலை செய்வதற்கு நாங்கள் எந்த நிபந்தனையும் விதிக்கவில்லை.

எங்களது இயக்கத்தின் நல்லெண்ணத்தை தெரிவிக்கவே இந்திய வீரர்களை ஒப்படைக்க முடிவுசெய்தோம்.

இவ்வாறு மாத்தையா கூறினார்.

எல்.டி.டி.இ. தளபதி ரகீம் கூறுகையில் இந்தியா இலங்கை உடன்பாட்டை நாங்கள் ஏற்காவிட்டாலும் அதற்காகநாங்கள்ஒத்துழைப் போம் என்றார்.

யாழ்ப்பாணத்தில் நடந்த சண்டையில் பாதிக்கப்பட்ட 2 தமிழ் பத்திரிகைகளில் ஒரு பத்திரிகையின் உரிமையாளர் இந்திய அமைதிப்படையின் உதவியை நாடினார். இந்திய அமைதிப் படையே அந்த பத்திரிகையை ஏற்று நடத்தப் போகிறது.



# திருட்டுத்தனமாக மரங்களை வெட்டினால் கடும் தண்டனை

சென்னை, நவ. 20 வனங்களில் மரங்களைத் திருட்டுத்தனமாக வெட்டுபவர்களையும் வனவிலங்குகளை குறிப்பாக யானைகளை வகை தொகையின்றி கொல்பவர்களையும்ஓராண்டு தடுப்புக்காவலில் சட்டப்படி சிறைவைக்க வகை செய்யும் சட்டமுன் வடிவு சட்டப் பேரவையில் நிறைவேறியது

இதற்கான சட்ட முன் வடிவை அமைச்சர் வி.வி. சுவாமிநாதன்தாக்கல்செய்து பேசியதாவது -

கள்ளத்தனமாக காடுகளில் மரம் வெட்டுபவர்கள் கண்டு பிடித்து வழக்குகள் போடப் படுகின்றன.

1984-85ல் 38,583வழக்குகள் போடப்பட்டுள்ளன. 85-86-ல் 38,619 வழக்குகள் போடப்பட்டுள்ளன.

1982 முதல் 87 வரை சந்தன மரத்திருட்டுகள் 2672 வழக்குகள் கண்டு பிடிக்கப்பட்டு 5165 பேர்கள் மீது வழக்கு தொடரப் பட்ட இந்த சந்தனமரத் திருட்டின் மதிப்பு ரூபாய் ஒரு கோடியே 67 லட்சம் ஆகும்.

மரங்கள் திருடுவதைத் தடுக்க 3 பறக்கும் படைகள், அதிரடிப்படைகள், ஒரு ஐ ஜி. தலைமையில் காவலர்கள் அதிகாரிகள், இவர்களுக்கு ஆயுதங்கள் எல்லாம் தரப்படுகின்றன.

சந்தன மரத்தின் விலை மிக அதிகமாக இருக்கிறது ஒருடன் விலை ரூபாய் 13 லட்சத்து 60ஆயிரம் என்று உயர்ந்துஇருக்கிறதுஇதனால் சந்தன மரங்களை திருடுகின்றனர்,

தந்தங்களுக்காக யானையைக் கொல்கிறார்கள்பெண் யானைத் தந்தம் மீது அயல் நாட்டினருக்கு ப்போது மோகம் ஏற்பட்டு வருகிறது.

இப்படிப்பட்ட பெண் யானை தந்தங்களை தயிரில் வைத்து பம்பாய் போன்ற இடங்களுக்கு கடத்துகிறார்கள். இதுவும் கண்டுபிடிக்கப் பட்டு வருகிறது.

இப்படிப்பட்ட குற்றங்களை செய்பவர்கள் கள்ளச் சாராயக்காரர்கள், விபச்சாரவிடுதி நடத்துபவர்கள், குண்டர்கள் போன்றவர்கள் தடுப்புக் காவலில் வைப்பது போல இவர்களையும் தடுப்புக் காவலில் வைக்க இந்த சட்டம் வகை செய்கிறது

இது சாதாரண மக்களை பாதிக்காமல் பார்த்துக் கொள்ளப்படும்.

இவ்வாறு அமைச்சர் வி.வி. சுவாமிநாதன் கூறினார்.

# கோபம் அடைந்து 21 பேரை கடித்த நாய்க்கு அடைக்கலம்

சென்னை, நவ. 20- ஆத்திரம் அடைந்து 21 பேரை கடித்த நாய்க்கு நீல சிலுவை சங்கம் அடைக்கலம் கொடுத்தது.

சென்னை பூங்கா நகரில் ஏகாம்பரேஸ்வரர் கோயில் அருகேஒருநாய்க்குட்டிபோட்டிருந்தது குட்டிகளுடன் மகிழ்ச்சியாக இருந்த நாய்க்கு ஒரு துன்பம் வந்தது.

ஒரு ஆட்டோரிக்ஷா அந்த வழியாக சென்றபோது ஒரு குட்டியின் மீது ஏறி விட்டது நாய்க்குட்டி அங்கேயே செத்தது. உடனே ஆத்திரமுற்ற தாய்நாய் வருவோர் போவோரை எல்லாம் கடிக்க ஆரம்பித்தது

21 பேரை கடித்தது இதனால் அந்த நாயைக் கொல்ல சிலர் தடிகளுடன் புறப்பட்டனர் மிருகங்களை காக்கும் நீல சிலுவை சங்கம் இதை அறிந்து அங்கு விரைந்தது, நாயை கொல்ல வந்தவர்களைத்தடுத்து அந்த நாயையும் குட்டிகளையும் பெசன்ட் நகர்லுள்ள தங்கள் சங்கத்திற்கு எடுத்துச் சென்றனர் மகிழ்ச்சிடன் தாயும் குட்டிகளும் உள்ளன.



Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publication and Printed by all India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson manickam Road, MADRAS - 600 029.

★ சத்துணவு திட்டத்தால் நல்ல பலன்
★ தமிழ்நாட்டு பாடநூல் நிறுவனம் நல்ல சேவை செய்கிறது

# புரட்சித்தலைவருக்கு ப.சிதம்பரம் பாராட்டு



கோவை, நவ. 20-
சத்துணவு திட்டத்தால் நல்லபலன் ஏற்பட்டுள்ளது என்றும் தமிழ்நாட்டு பாட நூல் நிறுவனம் நல்ல முறையில் சேவை செய்கிறது என்றும் இதற்காக முதல்வர் புரட்சித் தலைவரை பாராட்டுவதாக மத்திய அமைச்சர் ப சிதம்பரம் கூறினார்.

கோவையில் நடைபெற்ற குழந்தை இலக்கிய மாநாட்டில் பங்கேற்று மத்திய அமைச்சர் ப. சிதம்பரம் உரையாற்றும் போதுமேற்கண்டவாறு பேசினார்.

மேலும் அவர் பேசியதாவது;-
நம்மிடம் போதுமான அளவு காகிதங்கள் உள்ளன அச்சு எந்திரங்களும் உள்ளன. கைத்தொழில் தெரிந்தவர்களும் உள்ளனா. பாடநூல் நிறுவனங்களுக்கு காகிதங்கள் வழங்குவதில் முதலிடம் தரவேண்டும்.

தமிழ்நாடு பாடநூல் நிறுவனம் நல்ல நூல்களை அச்சிட்டு வெளியிடுவதற்காக தமிழக அரசையும், முதல்வா எம்.ஜி.ஆர் அவர்களையும் பாராட்டுகிறேன்.

குறைந்த விலையில் நல்ல தரமான நூல்கள் வெளிவர அரசு ஆவன செய்யவேண்டும்.

தமிழகத்தில் குழந்தைகளுக்கு சத்துணவு வழங்கப்படுகிறது. சத்துணவுத் திட்டம் தமிழகத்தில் மிகச் சிறப்பாகச் செயல்படுகிறது.

இவ்வாறு மத்திய அமைச்சர் ப. சிதம்பரம் பேசினார்



சென்னை அகர்வால் பவன் கணேஷ்சந்த் குப்தாவின் மகன் நிர்மல்-மஞ்சு திருமண வரவேற்பில் அமைச்சர் ராசாராம் பங்கேற்று வாழ்த்தினார்.

# பதிப்பாளர்கள் தாமதமின்றி பணம் பெற அரசு ஆணை

சென்னை, நவ. 20-
தமிழ்நாடு பொது நூலகத் துறைக்கு நூல்களைத் தரும் பதிப்பாளர்களுக்கு பணம் தாமதமின்றி கிடைக்க அரசு ஆணையிட உள்ளது என்று அமைச்சர் பொன்னையன் குறிப்பிட்டார்.

தமிழ்நாடு அரசின் பொது நூலகத்துறை சார்பில் 20வது தேசிய நூலக வார விழா சென்னை தேவநேயப்பாவாணர் நூலக கட்டிடத்தில் நடைபெற்றது, விழாவுக்கு கல்வித்துறை செயலாளர் சுந்தர்ராஜ் தலைமை வகித்தார், பொது நூலக இயக்குனர் வா அ சிவஞானம் வரவேற்புரை நிகழ்த்தினார்.

வரவேற்புரையின் போது சிவஞானம் பேசுகையில் 1919ம் ஆண்டு நவம்பர் 14ம் தேதி பொது நூலக மாநாடு முதன்முதலாகநடைபெற்றது அதுமுதல் ஆண்டு தோறும் நவம்பர் 14 அன்று தேசிய நூலக வாரவிழா கொண்டாடப் படுவதாகக் கூறினார்.

விழாவில் சிலம்பொலிசெல்லப்பன், கோ.வி. மணிசேகரன், லேனா தமிழ்வாணன், அருணன் ஆகியோர் உரையாற்றினர். உதவி பொது நூலக இயக்குநர் ஜெகந்நாதன் நன்றி கூறினார்.

விழாவில் பங்கேற்று அமைச்சர் பொன்னையன் உரையாற்றினார்.

அவர் பேசியதாவது:-
நாட்டில் உள்ள மக்களிடையே நூல்களை படிக்க வேண்டும் அதன் மூலம்அறிவு வளரவேண்டும் என்ற நோக்குடன் பொது நூலகத்துறை இயங்கி வருகிறது அதை ஊக்குவிக்கும் விதத்தில் தேசிய நூலக வார விழா கொண்டாடப்படுகிறது.

இங்கே கருத்துரையாற்றிய அனைவரும் படிப்பவர்கள் மிகக்குறைவு என்றனர். அந்த நிலையை மாற்றி நாம் தரமான புத்தகங்களை கொணர்ந்து மக்கள் அறிவு வளர்ச்சி பெறச் செய்ய வேண்டும்.

மேலும் பதிப்பகத்தார்கள் விஞ்ஞானம் மற்றும் அறிவு சம்பந்தமான நூல்களை வெளியிட வேண்டும் குழந்தைகளின் நலன் கருதி குழந்தைகள் புத்தகத்தை வெளியிட வேண்டும் மேலும் இளைய சமுதாயத்தை விழிப்புறச் செய்யும் சக்தி ஆசிரியர்களுக்கு உண்டு. அவர்கள் தான் குழந்தைகளின் முன்னேற்றம் கருதி பாடங்களை போதிக்கவேண்டும்.

தமிழகத்தில் புதிய பாடத் திட்டம் அடுத்த ஆண்டுமுதல் அறிமுகப்படுத்த உள்ளது.

புதிய பாடத் திட்டத்தில் மாணவர்களிடையே விஞ்ஞானம் மற்றும் ஒழுக்க உணர்வை போதிக்கும் பாடங்கள் இருக்கும் மத்திய அரசு புதிய திட்டம் தந்ததும் நாம் டாக்டர் மால்கம் ஆதிஷேசையா தலைமையில் 14 பேரைக் கொண்ட குழு அமைத்து முற்றிலும் புதிய திட்டத்தை கொண்டு வந்து 1 முதல் 12வது வகுப்பு வரை அமல் படுத்தப்பட உள்ளது.

படிப்பு முறையில் மேலை நாடுகளை விட நாம் முன்னேற வேண்டும்.

பதிப்பகத்தார்கள் பணம் பெறுவதில் தாமதம் ஏற்படுவதாக இங்கே கூறினார்கள். அதற்கு காரணம் உள்ளாட்சி அமைப்புகளில் பணத்தை செலுத்த மறுப்பதும் தாமதப்படுத்துவதுமாகும் இந்த நிலையை மாற்ற சட்டரீதியாக அவர்களுக்கு அரசு தாக்கீது அனுப்பி விரைவில் பணத்தை கட்ட ஏற்பாடு செய்யப்பட்டு பதிப்பகத்தார்கள் தாமதமின்றி பணம் பெற ஏற்பாடு செய்யப்படும். சமுதாயத்திற்கு பலனளிக்கும் புத்தகங்களை வெளியிட்டு புத்தக விற்பனையைப் பதிப்பகத்தார்கள் அதிகரிக்கவேண்டும்.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் பேசினார்.

## தேசிய மாநாடு

சென்னை, நவ. 20-
இந்திய-சோவியத் கலாசாரக் கழகத்தின் 14வது தேசிய மாநாடு அடுத்த மாதம் 26,27,28 ஆகியதேதிகளில் சென்னையில் நடைபெறுகிறது.

இம்மாநாட்டில் இந்தியா முழுமைக்கும் உள்ளபிரதிநிதிகள் பங்கேற்கின்றனர் 35 உறுப்பினர்கள் கொண்ட ஒரு சோவியத் கலைக்குழுவும்இம் மாநாட்டில் பங்கேற்கிறது.

# ஏழைமக்கள் நலனுக்காக கடன் நிவாரண சட்டம்: புரட்சித்தலைவர் ஆணை

சென்னை, நவ. 20-
முதல்வர்புரட்சித்தலைவர் ஆணைப்படி கிராமப் புறத்தில் உள்ள ஏழை மக்களது நலன் கருதி விரிவான கடன் நிவாரண சட்டம் கொண்டு வரப்படும் என்று சட்டப் பேரவையில் அமைச்சர் பொன்னையன் அறிவித்தார்

கடன்நிவாரணசட்டத்தின் காலவரம்பை நீட்டிக்கவகை செய்யும் சட்ட முன்வடிவு விவாதத்திற்கு பதில் அளித்து அமைச்சர் பொன்னையன் பேசியதாவது:-

கிராமப்புற ஏழை மக்கள் கடன் தொல்லையை அகற்ற இந்த சட்டம் கொண்டு வரப்பட்டது.

இதுவரை ரூபாய் 66 லட்சத்து21ஆயிரம்மூலம்23,646 பேர்களுக்கு பலன் கிடைத்துள்ளது.

கடன்பட்டுள்ள கிராமப் புற ஏழைமக்கள்இந்தசட்டத்தைப்பற்றி தெரிந்து கொள்ள பட்டி தொட்டிகளிலும் விளம்பரம் செய்ய அரசு நடவடிக்கை எடுக்கும்.

லட்சக்கணக்கான ஏழைகள் கடன் பெற்று வட்டியும் சேர்ந்து அடகுப் பொருளையே இழக்கும் நிலை ஏற்படுகிறது.

## விரிவான சட்டம்

அதிகமான அளவில் ஏழை மக்களுக்கு உதவும் வகையில் விரிவான சட்டம் கொண்டு வர வேண்டும் என்று புரட்சித்தலைவர் விருப்பம் தெரிவித்துள்ளார்.

கிராமப்புற ஏழை மக்கள் நலன் கருதி கடன் நிவாரண சட்டம் விரிவான முறையில் கொண்டு வரப்படும்.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் கூறினார்.

## திருடனை சுட்ட போலீசாருக்கு பரிசு

சென்னை, நவ. 20-
சென்னை பேசின்பிரிட்ஜ் அனல்மின் நிலையத்தில் சில தினங்களுக்கு முன்பு திருட முயற்சித்த போது கூனன் என்பவனை ஆயுதப்படை போலீஸ்காரர் எழிலன் துப்பாக்கியால் சுட்டுக்கொன்றது தெரிந்ததே

கூனனை தடுத்தபோது கத்திக்குத்துப்பட்ட எழிலனுக்கு கமிஷனர் தேவாரம் 500 ரூபாய் பரிசு வழங்கினார். மகாகவி பாரதிநகர் அகர்வால் 500 ரூபாய் பரிசு வழங்கினார். எழிலனுக்கு உதவி தலைமை காவலர் பதவி உயர்வும் அளிக்கப்பட்டது.

# நாடாளுமன்றத்தில் அன்னை இந்திரா உருவப்படம் திறப்பு

புதுடெல்லி, நவ. 20-
நாடாளுமன்றத்தில் அன்னை இந்திராவின் உருவப்படத்தை ஜனாதிபதி வெங்கட்ராமன் திறந்து வைத்தார்.

அன்னை இந்திராவின் 71வது பிறந்த நாள் இந்தியமுழுவதும்கொண்டாடப்பட்டது நாடாளுமன்றத்திலுள்ள மத்திய மண்டபத்தில் அன்னை இந்திராவின் உருவப் படத்தை ஜனாதிபதி வெங்கட்ராமன் திறந்து வைத்தார்.

இந்த நிகழ்ச்சியில் அவர் பேசியதாவது:
இந்திராகாந்தி சாதி, மதம் மற்றும் [illegible] உணர்வை கடந்து ஒப்பற்ற தலைவராக விளங்கினார் இந்தியாவின் ஒற்றுமையை நிலைநாட்டும் ஒரு சின்னமாக அவர் திகழ்ந்தார்.

## 20அம்ச திட்டம்

வங்கிகளை அரசுடமையாக்கி சாதனை புரிந்த அவர் ஏழை எளிய மக்களின் வாழ்வை முன்னேற்றுவதற்காக அரும்பாடுபட்டார் அவர் கொண்டு வந்தஇருபது அம்ச திட்டம்அடிமட்டத்தில் உள்ளவர்களை மேம்பாடு அடையச்செய்தது.

அவருடைய காலத்தில் தான் விவசாயம், தொழில் துறை, விஞ்ஞானம், மற்றும் பலதுறைகளில் இந்தியா வேகமாக முன்னேறியது உணவு உற்பத்தியில் தன்னிறைவு பெற்று விளங்கியது. பொருளாதார துறையில் பல நல்ல திட்டங்களை தீட்டி செயல்பட்ட அவர் மற்ற நாடுகள்பாராட்டும் வகையில்பல அதிசயங்களை உருவாக்கினார்.

1971ம் ஆண்டு வங்காள தேச போர் நடந்த போது அமெரிக்கா நேரிடையாகவே தலையிட முயன்றதுஎனினும் சிறிதும் அஞ்சாமல் வங்காள தேச மக்களுக்கு விடுதலை வாங்கி கொடுத்தார்.

இந்திய துணைக் கண்டம் அமைதியாக விளங்க வேண்டும் என்பதில் தனி அக்கறை காட்டி வந்தார் அணு ஆயுதங்களை ஒழிப்பதற்காக அடும்பாடுபட்டார் நாட்டுக்காக தன் வாழ் நாள் முழுவதையும் அர்ப்பணித்தார்.

மேற்கண்டவாறு ஜனாதிபதி பேசினார்.

விழாவில் துணை ஜனாதிபதி சங்கர் தயாள் சர்மா, பிரதமர் ராஜீவ் ஆகியோரும் பங்கேற்று பேசினர்.

## துப்பாக்கி லைசென்ஸ்: கமிஷனர் அறிவிப்பு

சென்னை, நவ 20-
சென்னை நகரில் 1907 பேர் அனுமதி பெற்று துப்பாக்கிகள் வைத்துள்ளனர் வருகிற 31-12-87க்குள் துப்பாக்கி லைசென்சைபுதுப்பித்துக் கொள்ளவேண்டுமென்று சென்னை நகர போலீஸ்கமிஷனர் தேவாரம் கேட்டுக்கொண்டுள்ளார்.

# ரஜினீஷ் சாமியாருக்கு எய்ட்ஸா?சீடர்கள் மறுப்பு

பூனா. நவ. 20
ரஜினீஷ் சாமியாருக்கு எய்ட்ஸ்நோய் இருப்பதாக கூறுவது ஆதாரமற்ற பொய் பிரச்சாரம் என ரஜினீஷ் சாமியாரின் சீடர்கள் எதிர்ப்பு தெரிவித்துள்ளார்கள்.

ரஜினீஷ் சாமியாருக்கு எய்ட்ஸ்நோய் உள்ளதாக பம்பாயைச் சேர்ந்த டாக்டர் ஜில்டா தெரிவித்திருந்தார் இதற்கு பூனாவில் ரஜினீஷ் ஆசிரமத்தில் உள்ள அவரது சீடர்கள் கடும் எதிர்ப்பு தெரிவித்துள்ளனர். டாக்டர் ஜில்டா மீது வழக்குத்தொடரப்படும் எனவும் சீடர்கள் தெரிவித்துள்ளனர்.

## போக்குவரத்து விதிமீறல்: அபராதம்

சென்னை, நவ. 20-
போக்குவரத்து விதிகளை மீறியவர்களிடமிருந்துகடந்த ஒருவாரத்தில் ரூபாய் ஒருலட்சத்தி பத்தாயிரத்து நூறு வசூலிக்கப்பட்டது.

17-ம் தேதி மட்டும் ஆட்டோக்களில் மீட்டர் தில்லுமுல்லுசெய்தவர்களிடமிருந்து 11,350 ரூபாய் வசூலிக்கப்பட்டது.

மேலும் ஆட்டோக்களில் டிரைவர்களின் இருக்கைக்குப் பின் புறம் பயணிகள் பார்க்கும்வண்ணம் நம்பர் எழுதப்பட வேண்டும்.

கார் மற்றும்வாகனங்களில் நம்பர் பலகைகள் தெளிவாக எழுதப்பட வேண்டும் என்று போக்குவரத்து போலீசார் தெரிவித்துள்ளனர்.

# தமிழ் பல்கலைக்கழக நூலக வளர்ச்சிக்கு ரூ.40 லட்சம் ஒதுக்கீடு

தஞ்சைநவ 20-
தமிழ் பல்கலைக் கழக நூலக வளர்ச்சிக்காக இன்னும் 2 ஆண்டுகளில் ரூபாய் 40 லட்சம் செலவழிக்கப்படும் என்று பல்கலைக்கழக துணை வேந்தர் அகத்தியலிங்கம் தெரிவித்தார்.

தஞ்சை தமிழ்ப்பல்கலைக் கழகத்தில் தொகுப்பியல் துறையின் சார்பில் நடைபெற்ற அகராதிக்கலை பற்றிய கருத்தரங்கு நடைபெற்றது.

இதில் கலந்து கொண்டு பல்கலைக்கழக துணைவேந்தர் அகத்திய லிங்கம் பேசியபோது கூறியதாவது:-

7-வது ஐந்தாண்டு திட்ட காலத்தில் தமிழ்ப் பல்கலைக் கழக நூலக வளர்ச்சிக்காக பல்கலைக்கழக மான்யக் குழு ரூபாய் 40 லட்சம் வழங்க ஒப்புக் கொண்டு ஏற்கனவே ரூபாய் 25 லட்சம் வழங்கியுள்ளது. மீதியுள்ள தொகை விரைவில் வழங்கும். இந்தத் தொகை 2 ஆண்டு காலத்திற்குள் நூலக வளர்ச்சிக்காக செலவழிக்கப்படும்,

தமிழ்மொழியின் வளர்ச்சிக்கு உதவும் அனைத்துக் கலைகள் குறித்தும் தமிழ்பல்கலைகழகம் ஆய்வு நடத்தும்.

இவ்வாறு துணைவேந்தர் அகத்திய லிங்கம் கூறினார்.

தொகுப்பியல் துறைபேராசிரியர் வீராசாமி நன்றி கூறினார்.

## பெருங்களத்தூர் அருகே லாரிகள் மோதல்: 2 பேர் பலி

சென்னை, நவ. 20-
சென்னையை அடுத்தபெருங்களத்தூர் அருகே இரண்டு லாரிகள் நேருக்கு நேர் மோதிக் கொண்டதில் இரண்டுபேர் அந்த இடத்திலேயே இறந்தனர் இறந்தவர்களில் ஒருவர் டிரைவர் மற்றொருவர் கிளீனர்

இந்தவிபத்தில் காயமடைந்த லாரி டிரைவர் சேகர் மற்றும் சிலர் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வருகின்றனர் இதுகுறித்து தாம்பரம் போலீசார் விசாரித்து வருகின்றனர்,

# சீக்கிய பயங்கரவாதிகளுக்கு வருடம் 18 கோடி ரூபாய் பிரிட்டனிலிருந்து வருகிறது

சிங்கப்பூர் நவ. 20-
சீக்கிய பயங்கரவாதிகளுக்கு பிரிட்டனிலிருந்து வருடத்திற்கு ரூபாய் 18 கோடி வருகிறது.

பிரிட்டனில் ஏராளமான சீக்கியர்கள் உள்ளனர். சீக்கிய கோவில்களும் (குருத்வாரா) அங்கே உள்ளன.

பஞ்சாபில் வன்முறையில் ஈடுபட்டு வரும் சீக்கிய பயங்கரவாதிகளுக்காக பிரிட்டனிலுள்ள சீக்கிய கோவில்களில் நிதி திரட்டுகிறார்கள்.

வருடத்திற்கு 18 கோடி ரூபாய் பிரிட்டனிலிருந்து பயங்கரவாதிகளுக்கு அனுப்பப்படுகிறது.

இத்தகவலை லண்டன் பத்திரிகை ஒன்று கூறுகிறது. பிரிட்டனிலுள்ள 130 சீக்கிய கோவில்களில் 22 கோயில்களில் கடுமையான வசூல் நடக்கிறது என்றும் அந்த செய்தி தெரிவிக்கிறது,

சீக்கிய பயங்கரவாதிகளின் நடவடிக்கை பற்றி ஸ்காட்லாந்து யார்டு போலீஸ் கண்காணித்து வருகிறது.

## கோவையில் மிலாதுவிழா: அமைச்சர் பங்கேற்கிறார்

கோவை, நவ. 20-
கோவை நகரில் மிலாது விழா 21, 22 தேதிகளில் நடைபெற உள்ளது.

இவ்விழாவை அமைச்சர் சாத்தூர ராமச்சந்திரன் துவக்கி வைக்கிறார்.

மாநாட்டில் புதுவை மாநில முதல்வர் பாருக் பங்கேற்கிறார். மாநாட்டையொட்டி கருத்தரங்கமும் நடைபெறுகிறது.

மாநாட்டில்கழக தலைமை நிலையச் செயலாளர் அரங்கநாயகம் முன்னாள் அமைச்சர்ஒய் எஸ்.எம். யூசுப்மற்றும் மாணவர் அணிச் செயலாளர் கா லியாகத்அலிகான், நகர் மாவட்டச் செயலாளர் தா மலரவன், சின்னராசு எம் எல் ஏ மற்றும் பலர் பங்கேற்கின்றனர்.

இதற்கான ஏற்பாட்டை விழா தலைவரும் 38 வது வட்ட கழகசெயலாளருமான ஏ அப்பாஸ்நசீர் ஆகியோர் செய்து வருகிறார்கள்.

## டைரக்டர் சாவு: போலீசாருக்கு பரிசு

சென்னை, நவ. 20-
கோடம்பாக்கத்தில் டைரக்டர் ராஜா சந்திரா இறந்த காரணத்தைக் கண்டுபிடித்த இன்ஸ்பெகடர் நடராசன், செல்வராசு ஆகியோருக்கு ரூபாய் 200 ம் ஆறு காவலர்களுக்கு தலா ரூபாய் 100 ம் பரிசாக கமிஷனர் தேவாரம் வழங்கினார்.

# வ. உ. சி. இருந்த சிறைஅறை எது?

கோவை, நவ. 20
கப்பலோட்டிய தமிழன் வ.உ.சிதம்பரனார் இருந்த சிறை அறை (செல்) எது? என்றவிவரம். அவர்இருந்த கோவை சிறையில்இல்லை

தேசத் துரோக குற்றச் சாட்டுகளைகூறி வெள்ளையர் அரசு வ.உ.சி.க்கு 40 ஆண்டு சிறைத் தண்டனை கொடுத்தது தண்டனையை அனுபவிக்க 1908ம் ஆண்டு ஜூலை 10ந் தேதி கோவை சிறைக்கு கொண்டுபோகப்பட்டார். அங்கு 2 ஆண்டுகள் வைக்கப்பட்டார், அதன் பின் 1910 ம் ஆண்டு கேரளாவிலுள்ள கண்ணனூர் சிறைக்கு வ.உ.சி கொண்டு போகப்பட்டார்.

வ.உ.சி நினைவு நாளையொட்டி கோவையில் அவர் வைக்கப்பட்டிருந்த சிறையில் அஞ்சலி செலுத்த வ.உ.சியின் மகன் சுப்பிரமணியமும் மற்றும் வ.உ.சி நினைவு கமிட்டி உறுப்பினர்களும் சென்றனர்.

வ.உ.சி இருந்தசிறைஅறை எது என்பதற்கான அத்தாட்சி இல்லை. அவர் அங்கு 1908 ஜூலை 10-ந் தேதி கோவை சிறைக்குக்கொண்டு வரப்பட்டார் என்றுதான் ரிக்கார்டுகள் கூறுகின்றன.

இன்ன அறையில் வைக்கப்பட்டிருந்தார் என்பதற்கான குறிப்பு எதும் இல்லை.

## குண்டுவெடித்து 2 பேர் பலி

கொழும்பு, நவ. 20-
கொழும்பு அருகே உள்ள 'மலபி' என்ற இடத்தில் பூக்கடை ஒன்றில் குண்டுவெடித்ததில் இரண்டு பேர் இறந்துள்ளனர் இருவர் படுகாயமுற்றுள்ளனர்,

இரண்டு கோஷ்டிகளிடையே ஏற்பட்ட மோதலை அடுத்து இந்த குண்டு வெடிப்பு நிகழ்ந்ததாக இலங்கையின் லங்காபுவதி செய்தி நிறுவனம் தெரிவித்துள்ளது,